வெளியீடு. 7.

# வள்ளுவரைக் காணோம்!

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு—

கடலூர் திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,
(கடலூர், புதுநகர்.)

1949.

[விலை ஆறு அணா]

வெளியீடு. 7

# வள்ளுவரைக் காணோம்!

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு—

கடலூர் திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,
(கடலூர், புதுநகர்.)

1949.

[விலை ஆறு அணா]

## முன்னுரை:-

எமது அச்சகத்தின் ஏழாவது வெளியீடாக இந்நூல் வெளியிடப்படுகிறது. திருக்குறள் நாட்டில் நன்கு பரவுதற்கேற்ற நூல்களை வெளியிட்டு வருகின்றோம் என்பது குறித்து மகிழ்கின்றோம். பல்வேறு இடங்களிலிருந்தும் எமது நூல்களைப் பாராட்டி வாழ்த்துரைக் கூறும் அறிஞர்களுக்கு எமது நன்றி என்றென்றும் உரித்தாகுக.

தமிழகம் இந்நாள்வரை கண்டிராத முறையில் இந்நூல் அமைக்கப்பட்டுள்ளது. வள்ளுவனார் உள்ளத்தினைத் தெள்ளத் தெளிய எடுத்தியம்பும் இனியநூல் என்ற பெருமையுடன் வெளியிடுகின்றோம். அறிஞர்கள் ஆதரிப்பார்களாக.

திருக்குறள் முனிசாமி,
பொறுப்பாளர்.

கடலூர்
5—1—1949

திருக்குறள் அச்சகம் லிமிடெட்.,
கடலூர், [புதுநகர்]

# வள்ளுவரைக் காணோம்!



## *இதுதான் வழி-*

**'மாம்பழம் சாப்பிட்டேன்' என்கிறார் நண்பர். "மிகவும் நல்லது;"** என்றுதான் சொல்லுவோம். நல்லபழமாகத்தான் சாப்பிட்டிருப்பார் என்று கருதியே அப்படிப்பேசுகிறோம். உடனே நண்பர் "பழம் சாப்பிட்டதுதான் தாமதம். வாந்தியெடுக்க வந்துவிட்டது. வாந்தியும் எடுத்து விட்டேன்" என்கிறார். நமக்கு ஒரேவியப்பு ஏற்பட்டுவிடுகிறது. 'என்ன! இப்படிச் சொல்லுகிறீர்களே! பழம் சாப்பிட்டால் வாந்தி ஏன் வருகிறது' என்று கேட்டுவிடுகின்றோம். "அழுகல் பழம் சாப்பிட்டேன்" என்று பதில் கூறினால் நமக்கு எப்படி இருக்கும்? "மாம்பழம் சாப்பிட்டேன்" என்று அவர் முதலில் சொன்ன போது, 'மிகவும் நல்லது' என்று நாம் கூறியது தவறு என்று நினைக்கின்றோம். ஆனால் ஒன்று, 'பழம் சாப்பிட்டேன்' என்று யார சொன்னாலும் நல்லபழம் சாப்பிட்டதாகத்தான் நாம் ஊகிக்கவேண்டி யிருக்கிறது. வாந்தி யெடுத்தார் என்பதையறியும் பொழுதுதான் 'அழுகல் பழம்' என்று படுகிறது. இது போன்றுதான் இன்றைய "**திருக்குறள் படிப்பு**" நம்மவர்கள் பலரிடையே இருந்து வருகிறது!

அழுகல் பழம் சாப்பிடுவதைவிட சாப்பிடாமல் இருப்பதே மேலல்லவா! அதுபோல திருவள்ளுவர் அருளிய திருக்

குறளின் உண்மையினை நல்ல முறையில் தெரிந்து கொண்டு வள்ளுவர் உள்ளம் இன்னதுதான் என்று அறியும் வழிமுறை யறியாமல் குறட்பாக்களை மனம்போன போக்கில் அர்த்தம் செய்து கொண்டு படிப்பதைவிட படிக்காமல் இருப்பதே மேல் என்று சொல்லக்கூட மனம் ஓடுகின்றது!

இன்றைக்கு இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வள்ளுவர் திருக்குறள் நூலினை எழுதித்தந்தார். அந்நூலுக்குப்பலர் உரையெழுதி வைத்தார்கள். அவர்களுள் பரிமேலழகர் என்பவரும் ஒருவர். இவர் எழுதிவைத்துள்ள உரையே இன்று படிக்கப்பட்டு வருகிறது! இவர் சற்றேறக்குறைய ஆயிரம் ஆண்டுகட்கு முன்னர் (அல்லது கம்பர் காலத்திற்குப் பின்னர்) இருந்ததாகவும் காஞ்சிபுரம்..............வகுப்பைச் சார்ந்தவர் என்றும் ஆராய்ச்சியாளர் கூறுவர். எது எப்படியாயினும் இவர் (வடவர்) என்பது மறுக்கமுடியாத ஒன்று. ஏனெனில், தமிழர் பண்பாட்டினை அப்படியே எடுத்துரைக்க வந்த திருக்குறளினைத் தமிழ்ப்பண்புக்கு முற்றிலும் மாறான கருத்துக்களைக்கூறும் (வடமொழி) நூல்களின் வழிவந்த நூல் என்று பலரும் எண்ணும்படிச் செய்யவேண்டும் என்று முனைந்து நின்று அதற்கேற்றாற்போல குறட்பாக்களுக்கு உரை செய்து காட்டும் தந்திரத்திலிருந்தே, இவர் 'வடவர் மகனார்' என்பது புலனாக்கப்படுகிறது.

எனவே, திருக்குறளுக்கு உண்மையான பொருள் தெரிந்து கொள்ள வேண்டுமென்றால் குறட்பாக்களைத் தனித் தனியாகக்கண்டு சிந்தித்து சிந்தித்து பகுத்தறிவு கண்கொண்டு பார்த்து சாதி, மத, சமய, வருண பேதங்களை யெல்லாம் அறவே மறந்து பொது நோக்கத்துடன் கற்றாலன்றி வேறு வழியேயில்லை யென்போம். பலநாட்கள் இவ்வாறு பயின்று விட்டால், பின்னர் குறட்பாக்களுக்கு உரைகாண பிற குறட்பாக்களே துணைபுரியும் என்ற அரிய உண்மையினைக் கண்டு கொள்ள முடியும்.

## இவர் செய்தவேலை!

இந்தப் **பரிமேலழகர்** என்பவர் உரைசெய்து வைக்கும் பொழுது திருவள்ளுவர் நினைத்திராத வார்த்தைகளை யெல்லாம் (வடமொழி வார்த்தைகளை) குறட்பாக்களின் உரைப்பகுதிகளில் எழுதி இருக்கின்றார். உதாரணமாக **வருணம், மதம், சாதி, சமயம் புரோகிதர்**......இன்னும் இவை போன்று வடவர் தீய பழக்கங்களைக் கொண்ட கொள்கைகளைச் சார்ந்த சொற்களைக் கையாண்டிருக்கின்றார். இந்தச் சொற்கள் **ஆயிரத்து முன்னூற்று முப்பது** குறட்பாக்களில் எந்தக் குறளிலும் காணவே முடியாது. ஏன் இந்த வார்த்தைகளைப் புகுத்தினார்? சிந்திக்க வேண்டாமா? **வடவர் ஆயிரம் ஆண்டுகட்கு முன்பேயே அருந்தமிழரின் அடிப்படையான அறநூலின் பெருமையை அழிக்க வேண்டுமென்ற ஆசைதானே!**

## ஒரு உதாரணம்:-

சமீப காலத்தில் இருந்த **பேராசிரியர்** (மனோன்மணியம் ஆசிரியர்) **உயர்திரு. சுந்தரம் பிள்ளை** அவர்கள் நிறைந்த பேரறிஞர். வடமொழி தமிழ்மொழி அறிவு பெற்றவர். 'மனுதர்மம்' என்ற வடவர் நூலினையும் நன்றாகப் படித்தார். திருவள்ளுவர் **'அருளிய'** திருக்குறளினையும் தெளிவுபெற ஆராய்ந்தார் ஒரு முடிவு கண்டார். எழுதினார். **உலகமக்கள் அனைவர்க்கும் பொதுப்பட எழுதிய திருவள்ளுவனரின் திருக்குறளினைப் படித்தவர்கள் கொடுமையான குலத்துக்கொரு நீதிகூறும் மனுதர்ம சாத்திரத்தினை மனத்திலும் நினைத்தல் கூடுமோ!** அவ்வளவு மோசமானதாயிற்றே மனுதர்மம்! இது ஆசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் வாக்கு.

வள்ளுவர்செய் திருக்குறளை மறுவறநன்கு உணர்ந்தோர்கள்
உள்ளுவரோ மனுவாதி ஒருகுலத்துக்கொருநீதி—

திருக்குறள் எழுதிய வள்ளுவனார் மனுதர்மநீதிக்கு முற்றிலும் மாறாக (ஏன்? மனுதர்மத்தைக் கண்டிக்கும் முறையில்) நூலெழுதினார் என்பது வெள்ளிடைமலையென விளங்கவில்லையா? அந்தோ! பரிமேலழகர் எழுதுவதைப் பாருங்கள். திருவள்ளுவர் எழுதிய அறத்துப்பால் என்ற பகுதியில் கூறப்படும் அறம் என்ற சொல்லிற்கு விளக்கம் எழுதவந்த பரிமேலழகர்,

> " அறமாவது மனுமுதலிய நூல்களில்
> விதித்தன செய்தலும் விலக்கியன
> ஒழிதலுமாம் "— (சிறப்புப் பாயிரம்)

என்று கொஞ்சமேனும் வெட்கமில்லாமல் எழுதுகிறார். என்னே துணிச்சல்! அதாவது மனு முதலிய வடவர் நூல்களில் எந்தெந்த நீதிகள் கூறப்பட்டுள்ளனவோ அவைகளைத்தான் '**அறம்**' என்று வள்ளுவர் கொள்ளுகின்றார் என்று திருக்குறளைப் படிப்பவர்கள் நினைத்துக்கொள்ள வேண்டுமாம்! எனவே, வடவர் பண்பாட்டின் துணைகொண்டுதான் ஆசிரியர் திருவள்ளுவர் எழுதினார் என்ற பொய்யெண்ணம் வளர வழி செய்யப்பட்டது. இதுபோன்ற வஞ்சக முறைகள் **பரிமேலழகரின்** குறட்பா உரைகளில் பல இடங்களில் காணப்படுகின்றன. இது ஒரேஒரு சிறிய உதாரணமாகும்.

## புரோகிதம்!

உலகப் பொதுமறையான திருக்குறளில் புரோகிதத்தையும் கொண்டுவந்து சேர்க்கிறார் இந்தப்பரிமேலழகர் அறிவுக்குச் சிறிதேனும், பொருந்துமா? சிந்தியுங்கள். "**பெரியாரைத் துணைக்கோடல்**" என்று ஒரு அதிகாரம் (Chapter) திருக்குறளில் காணப்படுகிறது. பெரியார் என்பதுயார் என்று அறிஞர்களுக்கு—பகுத்தறி வாளர்களுக்கு உள்ளங்கை நெல்லிக் கனியென விளங்கும். ஒருநாட்டுக்குத் தலைவனாக—மன்னனாக—நாடாள்பவனாக இருக்கும் அரசன் நன்னுடைய அரசியல்

முறைகளுக்கு அவ்வப்பொழுது அறவுரைக்கூறப் பெரியோர்களைத் துணையாகக் கொள்ளுதல் வேண்டும் என்றே ஆசிரியர் வள்ளுவனார் 'பெரியார்' என்ற சொல்லினை அமைந்தார். அந்தப் **பெரியார்** என்ற சொல்லுக்கு விளக்கம எழுதவந்த பரிமேலழகர் பெரியார் என்பது, புரோகிதர்களைக் குறிக்கும் என்று எழுதி, அரசன் **புரோகிதர்** முதலாயினோர்களைத் துணையாக வைத்துக்கொள்ள வேண்டுமென்கிறார். புரோகிதம் என்ற சொல் வள்ளுவர் குறட்பாக்களில காணுமே! பின்பு, ஏன் பரிமேலழகர் இவ்வாறு எழுதுகிறார்? அங்குதான் வடவர் வஞ்சகம் வழிசெய்து விட்டது!

## சுத்தப்பொய் !

இந்துமதப் புராணப் பொய்க் கதைகளைக் கூறி உலகிற்கென்றே பொதுமறையாக எழுதப்பட்ட திருக்குறளுக்கு மாசு உண்டாக்குகின்றார் உரையாசிரியராகக் கூறப்படும் **பரிமேலழகர்.** அறிஞர்கள் முறையில்—ஆராய்ச்சிப் பெரியார்கள் முறையில் உண்மைகூற வந்த திருவள்ளுவரைப் புராணத்தில் கூறப்படும் **பிரகஸ்பதி, சுக்கிரன்** முதலியவர்களைப் பின்பற்றி வடவர்நீதி(!) வகுத்த **சாணக்கியர், காமாந்தகாரர்** முதலியவர்கள் சொலலியபடியே சொல்லுகிறார என்று பொய்யாகக் கற்பனை செய்து கூறுகிறார்,

'வினைத்திட்பம்' என்று ஒரு அதிகாரம் திருக்குறளில் காணப்படுகிறது. அதாவது, செய்யும் தொழிலில் முடிப்பவனுக்கு மனத்திண்மை—உறுதிவேண்டும் என்பதைப்பற்றிக் கூறுவது.

ஆராய்ந்தறிந்த அமைச்சர்களது மனத்துணிவு (எப்படியிருக்க வேண்டுமென்றால்) குற்றமேற்படும் தொழில்களைச் செய்யாதிருக்க வேண்டும் ; அப்படி எடுத்துக் கொண்டதொழிலில் (எதிர்பாராமல்) தவறோ—குற்றமோ—தடங்

கலை-ஏற்பட்டுவிட்டால், மனம் தளராமல் மேற்கொண்டு அத்தொழிலைத் துணிவு கொண்டு, விடாமல் செய்துமுடிப்பதேயாகும். இதுதான் குறட்பாவின் சுருக்கமான உரை. குறட்பா:—

**ஊறுஒரால் உற்றபின் ஒல்காமை இவ்விரண்டின்**
**ஆறுஎன்ப ஆய்ந்தவர் கோள்—**

[ஆய்ந்தவா—ஆராய்ந்தறிந்த அமைச்சர்களது, கோள்—துணிபு ஊறு—பழுதுண்டாகும்தொழிலை, ஒரால்-செய்யாமையும், உற்ற பின்—(அவ்வாறு எதிர்பாராதபடி) பழுது ஏற்பட்டுவிட்டால், ஒல்காமை—மனந்தளராமையும் ஆகிய, இவ்விரண்டின்—இவ்விரண்டினது, ஆறு-வழியாகும், என்பர்-என்று கூறுவர்.]

இந்தக்குறட்பாவுக்கு உரை எழுதவந்த பரிமேலழகர் **தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப்பூண்ட வியாழ வெள்ளிகளது துணிபு தொகுத்துப்பின் நீதி நூலுடையார் (சாணக்கியர், காமாந்தகாரர்) கூறியவாறு கூறுகின்றமையின்**......என்று விளக்கம் செய்து கொண்டேபோகின்றார். அறிஞர்களே! சிந்தியுங்கள்! ஒருகுலத்திற்கு ஒரு நீதி கூறும் மனுதர்மக் கூட்டத்தைச் சேர்ந்த சாணக்கியர்-காமாந்தகாரர் முதலிய **வடமொழிஆசிரியர்கள் கூறியதையேநமது மாபெரும் ஆசிரியர் திருவள்ளுவரும் கூறுகிறார் என்று பரிமேலழகர் கூறவருவாரானல்** இதைவிட தமிழர்க்குச்செய்த தீங்குவேறு என்ன இருக்கமுடியும்? மேலும், புராணத்தில் கூறப்படும் வியாழன், வெள்ளி முதலியவர்களை இழுத்துப் **பொதுமறை நூலுக்கு** மாசு, விளைவிப்பதையும் காணுங்கள். தமிழர்களுக்கென்று தனிப்பட்டநூல் ஒன்று கூட இல்லாமல்

---

ஊறொரா லுற்றபி னொல்காமை யிவ்விரண்டி
னாறென்ப ராய்ந்தவர் கோள்.

செய்துவிடவேண்டும் என்ற எண்ணம்தானே! **பேராசிரியர் நாவலர் திரு. ச. சோமசுந்தர பாரதியார் எம். ஏ. பி. யல்,** அவர்கள் திருக்குறளைப்பற்றிக் கூறுவதை நோக்குங்கள்—

"தமிழில் உள்ள நூல்கள் அனைத்தும் வடமொழியில் இருந்துதான் வந்தன (!) என்று கூறி மகிழும் (!) ஒருசிலருக் கன்றி நடுவு நிலைமையாளர்க்குத் திருக்குறள் தனிமுதலற நூல் என்பது தெள்ளிதிற்புலனாகும்"—

மேற்கூறியது போன்ற புராணப் பொய்க்கதைகளைப் பரிமேலழகர் பலகுறட்பாக்களுக்குக் காட்டுகின்றார். எப்படி யாவது, வடவர் நூல்களைப் பின்பற்றியது என்றோ, அல்லது வடமொழி நூல்களைத்தழுவியது என்றோ எண்ணும்படி வாசகர் களைச் செய்துவிட வேண்டும் என்பதே பரிமேலழகர் ஆசை. அத்துடன், வடமொழி நீதிகளைத்தான் வள்ளுவரும் ஒப்புக் கொள்ளுகின்றார் என்றும் செய்துவிட, வாதாடி பொருள் செய் கின்றார். இப்படிப்பட்ட ஒரு உரையாசிரியரைப் பின்பற்றிக் குறட்பாக்களைப் படித்தால் வள்ளுவர் உள்ளத்தைக் காணுதல் எங்ஙனம்?

## வருணம்!

"வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து
வான்புகழ் கொண்ட தமிழ்நாடு"—

என்று புகழ்பெற்ற நமது தேசியகவிஞர் பாரதியார் பாடிச்சென்றார். வள்ளுவனாரின் பொதுமறையின் பரந்த உண் மையினையும் ஆழத்தையும் நன்கு கண்டறிந்து அனுபவித்தே அவ்வாறு பாடினார். ஆனால் பரிமேலழகரோ பாரதியார் வாக் கினைப் பொய்யென்று (!) நினைக்கும்படி தமது உரையில் செய்து காண்பிக்கின்றார். **வர்ணாசிரம** கொடுமைகளைக் குறட் பாக்களுக்குப் பொருள்படும்படி எழுதுகிறார். 'வருணம்' 'வரு ணாசிரமம்' என்ற சொற்களை வள்ளுவர் வாக்கில் காணோமே!

உரைகளில் எங்ஙனம் புகுதல்கூடும்! அதுதான் பரிமேலழகரின் வேலைப்பாடு!

'உலகினுக்கே தந்து' என்ற பாரதியார் வாக்கிற்கு மாருக, இந்துமத இடுக்கினுக்குள் வள்ளுவர் உள்ளத்தை மறைத்து வைக்கப்பார்க்கிருர் பரிமேலழகர். **"நீத்தார் பெருமை"** என்றெரு அதிகாரம் திருக்குறளில் வருகின்றது. அதாவது முனிவர்—துறவிகள்—ஆசையினை முற்றிலும் விட்டவர்கள்—அந்தணர்கள்—ஒழுக்கம் நிறைந்தவர்கள் என்பதாகப் பேசப்படும் நுண்ணறிஞர்கள் (ஞானிகள்) என்பவர்களைப் பற்றிப் பேசுகின்ற பகுதி. அங்கு 'ஒழுக்கத்து நீத்தார்' என்ற தொடர் வள்ளுவர் வாக்கில் அமைக்கப்பட்டுள்ளது. மக்களாகப் பிறந்தவர்கள் ஒழுக்கம் என்பதை உயிரைவிட இன்றியமையாததாகக் கொள்ளவேண்டுமென்பதே ஆசிரியர் வள்ளுவரின் பேருரை. ஒழுக்கம் என்பது மக்களுக்குப்பொது. **'மக்கள் நலம்'** ஒன்றே என்பது தமிழரின் பண்பாடு. அதுவே வள்ளுவரின் எண்ணம். இந்த இடத்தில் **'வருணுச்சிரமம்'** என்ற வடவர் கொள்கை எப்படிப்புகுந்தது. பரிமேலழகர் எழுதுகிருர!

> தத்தம் வருணத்திற்கும் நிலைக்கு முரிய ஒழுக்கங்களை வழுவாதொழுக............

என்பதாக எழுதிக்கொண்டு போகிருர். அதாவது தமக்குரிய ஒழுக்கத்திலே நின்று துறத்தலாவது, தங்கள் தங்கள் **வருணுச்சிரமங்களுக்கு** உரிய ஒழுக்கங்கள் தப்பாமல் நடக்க வேண்டும் என்பதாகப் பொருள் செய்கிருர். இங்ஙனம் பொதுமறையான அறநூலுக்கு ஒவ்வாத வருணச்சிரம எண்ணங்களைத் திருக்குறள் கற்கும் மக்களிடையே புகுத்த எண்ணும் பரிமேலழகர் கருத்துதான் யாதோ? அறிஞர்கள் உணருவார்களாக! மற்றுமொன்று; நல்லொழுக்கம் என்பது மக்கள் எல்லோருக்கும் பொதுப்பட்டதாக இருக்க, பரிமேலழகர் விளக்குவதைப்

பார்த்தால் ஆளுக்கொரு ஒழுக்கம் இருக்கும் போலல்லவோ தோன்றுகிறது! என்னே! குறளுக்குச்செய்த குறும்பு!

## படுமோசம்!

நாகரிகத்திற்கும் மக்கள் நன்னெறிக்கும் சிறிதும் ஒவ்வாத பற்பல ஆபாசக் கதைகளை ஆரியப் புராண இதிகாசங்களில் காணுகின்றோம். அந்த முறையில் **மானத்திற்குப் பங்கமேற்பட்டும் வாழத்தான் வேண்டும்** என்பது போன்ற கருத்துக்களைப் பரிமேலழகர் தாராளமாக எழுதி வைக்கின்றார். இவைகளைக் காணும்பொழுது இவர் எழுதியது படுமோச உரையா— இது முறையா என்ற கேள்வி எழுந்துவிடுகின்றது.

திருக்குறள் நூற்றுமுப்பத்துமூன்று (133) அதிகாரங்களாகப் பிரிக்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரத்திற்கும் ஒவ்வொரு பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இப் பெயர்கள் திருவள்ளுவரால் கொடுக்கப்பட்டவை யல்ல—பிற்கால உரை யாசிரியர்களால் கொடுக்கப்பட்டன என்று கூறப்படுகின்றது. அது ஒருபுறம் இருக்கட்டும்.

இவ்வதிகாரங்களின் பெயர்களை வைத்துக்கொண்டு பரிமேலழகர் தனக்கென்று உண்டான முறைகளைக் கையாளுகின்றார். அதிகாரங்கள் வரிசையாக வைக்கப்பட்டிருத்தல் இயல்புதான். அறநூலில் ஒவ்வொரு பகுதியும் உயர்ந்த உண்மைகளைப் புகட்டுகின்றது. அப் பகுதிகளில் 'இது உயர்ந்தது' 'இது தாழ்ந்தது' என்று குறித்துப் பேசுதல் அறிவுடைமையாகாது. உதாரணமாக 'அடக்கமுடைமை' 'அன்புடைமை' 'வாய்மை' என்றெல்லாம் வரும்பொழுது ஒவ்வொன்றும் தனிப்பட்டே சிறந்தவை யென்று கொள்ளவேண்டுமே யொழிய, ஒரு அதிகாரத்திற்கும் மற்றொரு அதிகாரத்திற்கும் ஏதாவது தொடர்பு காட்டி **"அதனால்தான் இந்த அதிகாரத்தின் பின் இந்த அதிகாரத்தை வைத்தார்"** என்று விளக்கம் செய்தால், அது அறநூலுக்கு ஏற்றதென்று அறிஞர்கள் கொள்ளமாட்டார்

கள். ஆனால் பரிமேலழகரோ வென்றால், ஒரு அதிகாரத்திற்கும் மற்றொரு அதிகாரத்திற்கும் தொடர்பு காட்டிக்கொண்டே பேசுகின்றார். இதனைக் கண்டிக்க வேண்டியே, சமீப காலத்தில் இருந்த **தமிழ்ப் பெரும் புலவர், பேரறிஞர், சோழவந்தான், அரசஞ்சண்முகனர் பின் வருமாறு கூறிச் சென்றார். :—**

> "திருக்குறளுக்குப் பரிமேலழகர் அமைத்துக் காட்டும் அதிகாரங்கள் வைப்பு முறை தவறு என்பது எனது முதலாவது கருத்து"—

இது ஒரு பக்கம் இருக்க, அதிகாரங்களின் பெயர்களைச் சுட்டிக் காட்டி அந்தந்த அதிகாரங்களை அப்படிப்பட்ட வரிசைக் கிரமத்தில் வள்ளுவரே வைத்தார் என்றும், அவ்வாறு வைத்ததற்குக் காரணம் 'இதுதான்' என்றும் பரிமேலழகர் கூறுகின்ற வழியில் ஒரு இடம் !

பரிமேலழகரின் அமைப்புப்படி, திருக்குறளில் பதினைந்தாவது (15) அதிகாரமாக வுள்ளது **"பிறனில் விழையாமை"** என்பதாகும். அதாவது பிறனுடைய மனைவியை விரும்பக் கூடாது—காதலிக்கக் கூடாது—இச்சிக்கக் கூடாது—என்பதைப் பற்றியும் அத்தீய ஒழுக்கத்தை ஒழித்து நன்னெறியில் செல்ல வேண்டியதைப் பற்றியும் ஆசிரியர் வள்ளுவனார் தெளிவுபடுத்தும் பகுதி. அதற்கடுத்தாற்போல் **"பொறையுடைமை"** (பொறுமையான பண்பு) என்பதைப்பற்றிக் கூறும் பகுதி அமைக்கப்பட்டுள்ளது. பொறுமை என்பது தலைசிறந்த குணம் என்பதையும் நாம் அறிவோம.

பிறன்மனைவியை விரும்பாதே (பிறனில்விழையாமை) என்ற பகுதிக்கு அடுத்தாற்போல **"பொறையுடைமை"** (பொறுமையான குணம்—பொறுமையாக இரு) என்ற பகுதியினை (அதிகாரத்தினை) ஏன் வள்ளுவர் வைத்தார் என்பதற்குப் **பரிமேலழகர்** நாமெல்லாம் திடுக்கிடும்படியான காரண மொன்றினைக் காட்டு

கின்றார். அதாவது, ஒருவன் மற்றவனுடைய மனைவியை இச்சித்து செய்யத் தகாதனவற்றைச் செய்தாலும், அவனுக்கு ஒன்றும் செய்யாமல் (மற்றவன்—அதாவது தீங்கு செய்யப்பட்டவன்) பொறுமையுடனே சகிததுக்கொண்டு இருக்கவேண்டும் என்பதற்காக வேண்டியே "பிறனில் விழையாமை" என்ற அதிகாரத்தின்பின் "பொறையுடைமை" என்ற அதிகாரம் வைக்கப்பட்டது என்கிறார் பரிமேலழகர். இதுதான் பரிமேலழகர் கண்ட உண்மையோ! இப் பண்பு யாருடையதோ! பரிமேலழகர் எழுதுகிறார்:—

> "நெறியில் நீங்கிய செய்தாரையும் பொறுக்க வேண்டு மென்றற்கு இது (பொறையுடைமை) பிறனில் விழையாமையின் பின் வைக்கப் பட்டது"—

**பொறையுடைமை என்ற பண்பிற்கும், அதிகார அமைப்பு முறைக்கும் பரிமேலழகர் எடுத்துக் கூறும் விளக்கங்களை அறிஞர்கள் சிந்திப்பார்களாக.** இவ்வாறு எப்படியாவது ஒரு அதிகாரத்திற்கும் மற்றொன்றுக்கும் தொடர்பு காட்டிக்கொண்டே போகும பரிமேலழகர் தொடர்பு காட்டி வைக்க முடியாத அதிகாரத்தை—**"ஏன் இந்த அதிகாரத்தினை இதற்குப் பின் வைத்தார்"**—என்று கூற முடியாமல்—காரண மென்று ஒன்றினைச் சொல்லி வைக்காமல், விட்டு விடுகிறார்.

**"உழவு"** என்றொரு அதிகாரம் திருக்குறளில் இருக்கின்றது. அப் பகுதியில் ஆசிரியர் வள்ளுவனார் தலையாய உழவுத் தொழிலினால்தான் உலகமே இயங்க முடிகிறது என்றும் மிக அழகாகக் கூறிச் செல்லுகின்றார். அவ்வதிகாரத்திற்குப் பின்பு **"நல்குரவு"** (தரித்திரம், வறுமை) என்ற அதிகாரம் அமைக்கப்பட்டுவிட்டது. "உழவு" என்ற அதிகாரத்திற்கும் "நல்குரவு" என்ற அடுத்த அதிகாரத்திற்கும் எப்படிச் சம்பந்தம் கூறுவது? உழவுத் தொழில் செய்பவனுக்கு' 'நல்குரவு'

(வறுமை) வந்துவிடும் என்று கூறினல் அதைவிட முட்டாள்தனம் வேறொன்றும் இருக்க முடியாது. பிறகு எப்படித்தான் தொடர்பு காட்டுவது? பார்த்தார் பரிமேலழகர். ஒன்றும் முடியவில்லை போலும்! தொடர்பு காட்டி ஒன்றும் எழுதாமல் அப்படியே 'நல்குரவு' என்ற அதிகாரத்தை விட்டுவிட்டு, அடுத்துவரும் அதிகாரங்களுக்குத் தொடர்பு காட்டிக்கொண்டு போக ஆரம்பித்து விட்டார்!

## இதுதான் அறமோ!

உலகிற்கே அறம் வகுத்தெழுதிய திருவள்ளுவர் கூறாத 'அறநூல்'—அறமானவழி—யொன்றினைப் பரிமேலழகர் கூறுகின்றார்! அதுதான் "பொதுவிதி" என்றும் விளக்குகின்றார். இவர் கூறுவதைப் பார்த்தால் "அறமானசெயல்' ஒன்று கூட உலகில்இருக்க இடமில்லை யென்றே தோன்றுகிறது. **யார்வேண்டுமானாலும் எந்தவிதமான தீய செயலையும் செய்யலாம்என்று பரிமேலழகர்** கூறுகின்றார். இப்படிக் கூறுவதை **அறநூலில் கூறப்படும் பொதுவிதி** என்றும் குறிக்கின்றார். ஆனால், ஆசிரியர் வள்ளுவனாரோ தமிழ்மக்களின் உயர்ந்த பண்பாட்டின் அடிப்படையில் வைத்து எழுதி, எக்காரணம்பற்றியும் தீய செயல்களை செய்தல் கூடாதுஎன்று கண்டித்துக் கூறுகிறார். தமிழர் அறவழியில், பரிமேலழகர் **வடவர்** பழக்கத்தினை ஒட்டவைத்துக் குறளுக்கே மாசுபடியச் செய்துவிடுகிறார். குறட்பா:—

**இன்றாள் பசிகாண்பாள் ஆயினுஞ் செய்யற்க**
**சான்றோர் பழிக்கும் வினை—** [வினைத்தூய்மை]

[இன்றாள்–தன்னைப்பெற்ற தாயினது, பசி–பசியை காண்பாளாயினும்–வறுமையால் (அவள்துன்பப் படுவதை) கண்

---

இன்றாள் பசிகாண்பா ளாயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை.

டாலும், (அவள்பசியை நீக்கும்பொருட்டு) சான்றோர்—அறிவிற் சிறந்த பெரியோர் பழிக்கும்–நிந்திக்கின்ற, வினை–தொழில்களை, செய்யற்க–செய்யாதிருக்கக்கடவன்]

அதாவது, தன்னைப்பெற்ற தாய் பசியால்வாடுவதைக் கண்டாலும், அதை நீக்கும்பொருட்டுக்கூட **தீய தொழில்களைச்** செய்து பொருள்தேட முனையாதே என்றார் வள்ளுவனார், தொழில்செய்யுங்கால் மனத்தூய்மைதான் மிகமிக அவசியம் என்பதே ஆசிரியரின் எண்ணம். எக்காரணம்பற்றியும் இழி தொழில்—அறிஞர் பழிக்கும் தொழில்—சான்றோர் நிந்திக்கும் செயல்—செய்யாதேஎன்று இடித்துரைக்கின்றார். ஆனால் பரிமேலழகரோ, முற்றிலும் வெறுக்கத்தக்க வடவர் பண்பினைக் கொட்டிவிடுகிறார். அந்த வடவர் பண்பினை **அறநூல் பொது விதி** என்றுகூறும் பொழுதுதான் நமக்கு உள்ளம் புழுங்கு கின்றது.

தீய செயல்கள் எத்தனை வேண்டுமானாலும் செய்வதற்கு ஒரு சந்தர்ப்பம் இருக்கின்றது என்கின்றார் பரிமேலழகர்! **அதாவது, பெற்றோர்களும் மனைவியும், குழந்தைகளும் பசியால் துன்பப்படும் பொழுது எப்படிப்பட்ட தீய செயல்கள் எத்தனை வேண்டுமானாலும் செய்து** அவர்களைக் காப்பாற்றவேண்டும். மேலே, ஆசிரியர் வள்ளுவனார் குறளுக்கும் பரிமேலழகர் விளக்கத்திற்கும் ஏதாவது சம்மந்தம் இருக்க முடியுமா?

தனிப்பட்டமுறையில் பேசுவோம். ஒருவன் பொருள் சம்பாதிக்கின்றான் என்றால், பெற்றோர், மனைவி, குழந்தைகள்— இவர்கள் நலமாக இருக்கத்தானே சம்பாதிக்கின்றான் அவர் களில் முதலிடத்தில் வைத்து எண்ணப்படவேண்டியவள் 'தாய்' என்போம். அவள் பசிக்கொடுமையைப் போக்கவேண்டிக்கூட தீய செயல் செய்யாதே என்று வள்ளுவர் கூறியிருக்க, உரை யாசிரியராம் பரிமேலழகர் தீயனபலவும் செய்வதற்கு இடந்தந்து உரை எழுதி—அப்படியெழுதுவதை அறநூல் பொதுவிதிஎன்றும்

கூறுவாரேயானல், **பரிமேலழகர் உரை மனுதர்மத்தின் மறுபதிப்பு** என்று தானே கூறவேண்டும். இவருடைய இந்தக் கொள்கையினை ஆசிரியர் வள்ளுவனரின் குறளுக்கு அடியில் எழுதிவைத்தால் கற்பவர்கள் **வள்ளுவர் உள்ளத்தைக்** காணுதல் இயலாதே! பரிமேலழகர் எழுதுகிருர்:—

"இறந்த மூப்பினராய இருமுதுகுரவரும் கற்புடை மனைவியும் குழவியும் பசியான் வருந்து மெல்லைக்கண் **தீயன பலவுஞ்** செய்தாயினும் புறந்தருக என்னும் அறநூற் பொது விதி........"

அதாவது வயதுமுதி ந்த தாய் தந்தையாரும், கற்புடை மனைவியும், குழந்தையும் பசியால்வருந்தும் அளவிலே **தீயவைபலவும்** செய்தாயினும் காப்பாற்றுகவென்பது அறநூலிற் சொல்லப்பட்ட பொதுவிதி—என்பது பரிமேலழகர் கண்டதாகும். எக்காலத்தும், எவ்விடத்தும், எக்காரணம் பற்றியும் இழிசெயல் சான்ருேர் பழிக்கும் செயல்—தீய செயல்—செய்யவே செய்யாதே என்று அறவுரைப்புகட்டும் வள்ளுவனரின் குறளுண்மைக்கு இப்படித்தானு பொருள் செய்வது? பரிமேலழகர் கண்ட அறம் இதுதானு? இவ்வித வடவர் பண்பாட்டுப் பழக்கத்தினைக் கொண்ட ஒருவர் எந்தை வள்ளுவனர் உள்ளத்தினைக் காணமுயலுதல் ஒல்லுங்கொல்!

## இவனே அந்தணன்!

திருக்குறளுக்குப் பிறருடைய உரைகாண வேண்டிய அவசியம் ஏற்படாதவாறு ஆசிரியர் வள்ளுவனர் தாமே கருத்து இன்னதுதான் என்று அநேக சொற்களுக்கு விளக்கம் தந்து விடுகிருர். அப்படிப்பட்ட இடங்களிலெல்லாம் கூட பரிமேலழகர் வலிந்து பொருள் கொண்டு தமது 'வருணுசிரம வடவர்' கூற்றுக்கு ஏற்றவாறு மாற்றியமைத்து அர்த்தம் செய்கின்ருர். உதாரணமாக, **அந்தணன்** என்றசொல் யாரைக்குறிக்கும் என்று ஆசிரியர் வள்ளுவனரேதெளிவாக விளக்குகின்ருர். அரு

ளுடையவர்கள்தான் அந்தணர்என்று சொல்லப்படுவர் என்று காரணப்பெயராகவும் குறித்து வைக்கின்றார்.

"எல்லா உயிர்களிடத்தும் அருளொடுநடந்து கொள்ளுகின்றபடியால் அந்தணர் என்று சொல்லப்படுபவர்கள்அறவோராவர். (அதாவது முற்றும் துறந்த முனிவர்கள் என்ற துறையில்வைத்து எண்ணப்பட வேண்டியவர்கள்).— எல்லா உயிர்களிடத்தும் அருள்பூண்டு நடப்பதினால்தான் அந்தணர் என்ற பெயரால் கூறப்பட்டது.

**அந்தணர் என்போர் அறவோர்மற்று எவ்வுயிர்க்கும்
செந்தண்மை பூண்டு ஒழுகலான்— (நீத்தார் பெருமை)**

[எவ்வுயிர்க்கும்—எல்லா உயிர்களின் மேலும்; செந்தண்மை—செவ்விய அருளினை; பூண்டு—மேற்கொண்டு; ஒழுகலான்— நடக்கையினாலே; அந்தணரென்போர்—அந்தணரென்று சொல்லப்படுவோர்; அறவோர்—தூயமனது படைத்த முனிவர்களாவர்.]

திருவள்ளுவர் வாக்குப்படி **அந்தணர்** என்ற சொல்லுக்கு விளக்கம் மிகமிகத்தெளிவாக விளங்கி விட்டது. '**அந்தணர்**' என்றசொல், **மனத்தூய்மை—அருளுடைமை—ஆகிய இரண்டின் அடிப்படையில் எழுந்ததாகும்.** உண்மை இவ்வாறிருக்க, அந்தணன் என்ற சொல்லினை ஒரு தனிப்பட்ட **வருணத்திற்கு மட்டும்** உரிய சொல்லென்று கொண்டு (அந்தணன் என்ற சொல்லிற்கு உள்ள உயர்ந்த பொருளினையே மறைத்து) **பார்ப்பான்** என்ற சொல்லுக்கு 'அந்தணன்'

---

அந்தண ரென்போ ரறவோர்மற் றெவ்வுயிர்க்குஞ்
செந்தண்மை பூண்டொழுக லான்.

என்று அர்த்தம் எழுதிவைப்பாரேயானல் பரிமேலழகர் வள்ளு வர் குறளுக்குச்செய்யும் தீங்குவேறு என்ன இருக்க முடியும்? அவ்வாறு உரைசெய்யும் இடத்திற்குப் போவோம்.

'பார்ப்பான்' என்றசொல் 'ஒழுக்க முடைமை' என்ற அதிகாரத்தில் ஒரு குறட்பாவில் காணப்படுகிறது. அந்த இடத் தில் **பார்ப்பான்** என்ற சொல்லிற்கு வேதங்களை (வடவா என்ற அவர்கட்கு உரிய ஓத்தினை) பார்ப்பவன்—படிப்பவன் என்றே பொருள். இப்படியாக தங்களுடைய ஓத்துக்களைப் பார்த்துக் கொண்டிருப்பவன் மக்களுக்கு வேண்டிய ஒழுக்கங் களை மறந்து, ஓத்தினை (வேதத்தினைப்) பார்த்துக் கொண்டிருந் தாலே **உயர்ந்தோராவோம்** என்று தவருக எண்ணிக் கொண் டிருப்பவனுகின்ருன். மக்களுக்கு இருக்கவேண்டிய ஒழுக்கத் தையும் அலட்சியப்படுத்தி விடுகின்ருன். அப்படிப் பட்டவனைப் பார்த்து ஆசிரியர் வள்ளுவனர் கூறுகிருர்.

> படித்துக் கொண்டிருக்கின்ற ஓத்தினை (வேதத்தினை) மறந்தாலும் பிறகு திருப்பிப் படித்துக் கொள்ளலாம். ஆனல் "**மக்கள் பிறப்பு**" என்பதற்கு இருக்க வேண்டிய ஒழுக்கத்தினை மறந்து விடுவானேயானல்—அந்தப்பார்ப்பான்—என்பவன் கெட்டு விடு வான்"—

**மறப்பினும் ஓத்துக் கொளல்ஆகும் பார்ப்பான்**
**பிறப்புஒழுக்கம் குன்றக் கெடும்—**

இந்தக்குறட்பாவினை நன்கு சிந்தித்துப் பார்ப்போமாக. பார்ப்பான் என்பது 'வடவர் பார்ப்பனர்கள்' என்பவர் களைத்தான் குறிக்கின்றது என்று கொள்ளாமல், '**பார்ப்பான்**'

---

மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்
பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்.

என்பது பொதுப்பட நூல்களைப் படிப்பவர்கள் அனைவர்க்குமே பொருந்தியது என்றே வைத்துக்கொள்ளுவோம். அப்படி இருந்தாலும் 'ஓத்து' என்கிற சொல்லினையும் கருதிப்பார்த்தல் வேண்டும். **திருக்குறளில் வேறு எந்த இடத்திலும் 'ஓத்து' என்ற சொல்லினையே காணோம்.** பார்ப்பான் என்று குறிப்பிடுகின்ற இந்தக் குறட்பா ஒன்றினில்தான் 'ஓத்து' என்கிற சொல்லும் காணப்படுகின்றது. இவர்களைத்தான் வேதியர் (வேதம் ஓதிய வேதியர்) என்று பிற்காலத்தவர் குறிக்கலாயினர்.

மேலும் 'பார்ப்பனர்' "பார்ப்பான்" என்பவர்களுக்குத் தனிப்பட்ட வேஷம் (வேடம்)—தனிப்பட்ட—தோற்றம் உண்டு என்றும் பரிமேலழகர் கூறுகின்றார்.—

'ஒற்றாடல்' என்றொரு அதிகாரம் திருக்குறளில் இருக்கின்றது. அதாவது இக்காலத்தில் (சி. ஐ. டி) போன்றவர்களாவர் என்று கூறலாம். இவர்களைப்பற்றிப் பேசும்பொழுது திருவள்ளுவர் அந்த ஒற்றர்தொழில் செய்பவர்கள், பிறர் சந்தேகிக்க முடியாத உருவத்துடன் செல்லுதல் வேண்டும் என்றும் கூறுகின்றார். பிறர் சந்தேகிக்காத வேடம்—உருவம்—தோற்றம் என்பதை விளக்கவந்த **பரிமேலழகர்** 'பார்ப்பார்' போன்ற தோற்றத்தில் செல்லுதல்வேண்டும் என்கின்றார். எனவே 'பார்ப்பான்' என்பவனுக்குத் தனிப்பட்ட (வேடம்) தோற்றம் உண்டு என்றே கொள்ளுகின்றார். அப்படியென்றால் **'பார்ப்பார்'** என்பவர்கள் யாவர் என்று பரிமேலழகர் கொள்ளுகின்றார்?

இவ்வாறு 'பார்ப்பார்' 'பார்ப்பான்' என்பவர்களைப் பற்றிக் கூறியதை அறிந்திருந்தும் **"மறப்பினும் ஓத்துக் கொளலாகும்.........'** என்ற குறட்பாவில் வருகின்ற 'பார்ப்பான்' என்ற சொல்லுக்குப் பரிமேலழகர் 'அந்தணன்' என்று பொருள் செய்து காண்பிக்கின்றார் என்றால் இதைவிட **வலிந்துபொருள் கொள்ளும் வர்ணாச்சிரம தர்மம் (!)** வேறு என்ன இருக்கமுடியும்? மற்றும், குறட்பாக்கள் பலவற்றிற்கும்

உரைகாணும் போதெல்லாம் "வருணம், வருணம்" என்றே குறிப்பிட்டுக் கொண்டு போவதைப் பார்த்தால் வேண்டுமென்றே வருணாசிரம தர்மத்தைக் குறளில் நிலைநாட்ட முயலுகின்றார் என்பது வெளிப்படையாகத் தெரிந்து விடுகின்றது!

## வடநூல் முறை!

வடநூலார்களின் கொள்கை—முறை—வடவர் வாழ்க்கை நெறி—இன்னதுதான் என்பதைப் பரிமேலழகர் சுருக்கமாகக் கூறி விடுகிறார். வடவர்களின் பொய்க் கூற்றினை—மானமிழந்து காரியம் செய்யும் இழி தன்மையினை அப்படியே அமைத்துக் காட்டுகின்றார். இவ் வுண்மையினைக் கூறும் பரிமேலழகரைப் பாராட்டுகின்றோம். **ஏதாவது ஓரிடத்திலாவது உண்மை கூறிவிடுகின்றாரே!** வடநூலார்களின் கொள்கைகளைத் திருவள்ளுவர் மறுத்து விடுகின்றார் என்று பரிமேலழகர் எடுத்துக் காட்டும் இடம்.

மானம் பெரிதா, உயிர் பெரிதா என்ற கேள்வி எழுமேயானால், மானந்தான் பெரிது—உயிர் பெரிதல்ல என்று கூறுவது தமிழன் பண்பு. உயிரை விட்டேனும் மானத்தைக் காப்பாற்றுக என்பது தமிழன் இயல்பு. **மானத்தை விட்டேனும்—விற்றேனும்—உயிரைக் காப்பாற்று என்பது வடவர் கொள்கை.** இக் கருத்தினை வடவராகிய பரிமேலழகரே குறிக்கின்றார்:—

> "இறப்ப வந்துழி இளிவந்தன செய்தாயினும் உய்கவென்னும் **வடநூன் முறைமையை மறுத்து,** உடம்பினது நிலையின்மையையும் மானத்தினது நிலையுடைமையையுந் தூக்கி அவை செய்யற்க வென்பதாம்"—

அதாவது, உயிருக்கு ஆபத்து வந்தபொழுது மானத்தை விற்று இழிவான எந்தச் செயலைச் செய்தாவது தப்பித்துக் கொள்ளுவாயாக என்று கூறும் (வடமொழியாளர்களுடைய)

நூல்களின் முறையை மறுத்து **மானத்தின்** பெருமையினை (தமிழ் மக்களின் பண்பிற் கேற்ப) எடுத்துரைத்தார் என்பதாம். இக் கருத்தினைக் கீழ்வரும் குறட்பாவின் உரைப் பகுதியில் பரிமே லழகர் விளக்குகின்றார்.

**இன்றி யமையாச் சிறப்பின வாயினுங்**
**குன்ற வருப விடல்— (மானம்)**

[இன்றியமையாத மிகமிகப் பெரிய—சிறந்த—மேலான நிலையினைப்—பெயரினை உண்டாக்கக் கூடிய செயலாக இருந்தாலும்—அப்படி அந்தச் செயல் செய்வதினால் தன்னுடைய மானத்திற்குப் பங்க மேற்படும்போல் இருந்தால், அது எவ்வளவு அதிகப் பெருமையைக் கொடுக்கும் செயலாயிருந்தாலும் செய்யாதே.]

இங்ஙனம், தமிழர் பண்பாட்டினைக் குறிக்க வேண்டியே வடவர்களின் மானம் விற்கும் பழக்கத்தினைப் பரிமேலழகர் வெளிப்படையாகக் கூறிவிடத்தான் வேண்டும் என்கிற நிலையில் வந்துவிட்டார். ஏனெனில், **“மானம்” என்கிற பகுதி சிறப்பியல்பாகத் தமிழர் பண்புகளில்தான் காண முடியும். வடவர்களுக்குத்தான் இல்லையே!** பின்னர், மானம் என்பதை அலட்சியப் படுத்துதல் **வடவர் நூல்களின்** தன்மை யென்பதில் வியப்பில்லையே! உண்மை யிவ்வாறிருக்க இந்தப் பரிமேலழகர் ஆசிரியர் வள்ளுவனார் வடமொழி நூல்களைப் பின்பற்றித்தான் திருக்குறளினை எழுதிச் செல்லுகின்றார் என்று பல இடங்களில் கூறிச் செல்லுகின்றார் என்றால், குறும்பு என்றுதானே சொல்லத் தோன்றுகிறது; ஒரு உதாரணம். ‘காதல்’ என்பது எத்தகைய உயர்ந்த நிலையில் தமிழர் நூல்களில் காணப்படுகிற தென்பது உலகமறிந்த செய்தி. இவ்வுயரிய பண்பாட்டினை ஆசிரியர் வள்ளுவனார் விளக்கிக் காட்டும் **காமத்**

---

இன்றி யமையாச் சிறப்பின வாயினும்
குன்ற வருப விடல்.

துப் பால் இருநூற்றைம்பது குறட்பாக்களிலும் அழகுற காண்கின்றோம். இப்படியிருக்க, **திருக்குறளில் காமத்துப் பால் முறையினை வட நூல்களைப் பின்பற்றித்தான் வள்ளுவர் எழுதுகிறார்** என்றால் இது பரிமேலழக வடவர், திருக்குறளின் பெருமையினைச் சிதைத்து—உண்மையினை மறைக்கின்றார் என்றுதானே பொருள்.

> "...ஏனை இருத்தல், இரங்கல், ஊடல் என்பனவோ வெனின், இவர் (திருவள்ளுவர்) பொருட் பாகுபாட்டினை அறம் பொருளின்பமென **வட நூல் வழக்குப் பற்றி யோதுதலான்,** அவ்வாறே யவற்றைப் பிரிவின்கண் அடக்கினா ரென்க. இனி **அவை தம்மையே** தமிழ் நூல்களோடும் பொருந்தப் புணர்ச்சியைக் களவென்றும் பிரிவைக் கற்பென்றும்.."
>
> —[பரிமேலழகர்]

எவ்வளவு தவறான எண்ணத்தைப் படிப்பவர் மனதில் உண்டாக்கி விட முடியுமோ அவ்வளவும் செய்து காண்பிக்கின்றார் **பரிமேலழகர்.** சரித்திர ஆராய்ச்சியும் காலவரை முறையறிவும், தமிழர் நாகரிக அடிப்படைப் பண்பாடும் அறிந்திராத புராணக் குப்பைப் புழுக்களான ஒரு சில தமிழர்களும் பரிமேலழகர் சொல்லுவதை நம்பத்தான் செய்வார்கள். வடவர் கூற்றுக்களை அப்படியே அழித்துப் புதைக்க எழுந்த திருக்குறளினை எவ்வளவு தூரம் திரித்து மறைத்துக் கெடுக்கின்றார்கள் என்பதைச் சிந்தியுங்கள்.

> "அநாதியாய அவிச்சையும், அதுபற்றியானெ மதிக்கும் அகங்காரமும், அதுபற்றி எனக்கிது வேண்டுமென்றும் அவாவும், அது பற்றி அப் பொருட்கட் செல்லு மாசையும்,

அதுபற்றி அதன் மறுதலைக்கட் செல்லுங் கோபமு மென் வட நூலார் குற்ற மைந்தென் ருர். இவர் (திருவள்ளுவர்) அவற்றுள் அகங் காரம் அவிச்சைக் கண்ணும் அவாவுதல் ஆசைக் கண்ணு மடங்குதலால், மூன்றென் ருர் "—[பரிமேலழகர்]—("மெய்யுணர்தல்")

"இவை பற்றி யல்லது பகைவர் அற்றந்தாராமையின் இவையே பகையாவன வென்னும் வடநூலார் மதம் பற்றிக் குற்றமே யற்றந் தரூஉம் பகையென்றும், இவற்றதின்மையே குணங்களதுண்மையாகக் கொண் டென்பார் பொருளாக வென் றுங் கூறினர்."—"குற்றங் கடிதல்"—[பரிமேலழகர்].

"இனி மனு முதலிய அறநூல்களாற் பொதுவாகக் கூறப் பட்ட இல்லறங்கள் எல்லாம் இவர (திருவள்ளுவர்) தொகுத்துக் கூறிய இவற்றுள்ளே அடங்கும்; அஃதறிந்து அடக்கிக் கொள்க; யாமுரைப்பிற் பெருகும்."—"புகழ்"—(பரிமேலழகர்)

மேலே குறிப்பிட்டுள்ளவைகள் திருக்குறளுக்கு உரை காண வந்த பரிமேலழகரின் பல் வேறுபட்ட கூற்றுக்களுக் குள் "ஒரு சிலவே யாகும்." எப்படியாவது, தமிழர்களின் தனி முதலற நூலாகிய திருக்குறள் வடமொழியைப் பின்பற்றியது அல்லது சார்ந்து எழுதப்பட்டது என்ற எண்ணத்தைப் புகுத்தி விட வேண்டுமென்ற வஞ்சக எண்ணமே யாகும். இப்படிப்பட்ட —வடவர் அடிப்படைக் கருத்துக்களை மனதில் வைத்துக் கொண்டு எழுதிய—"பரிமேலழகரின் திருக்குறள் உரை", வள்ளுவர் உள்ளத்தைக் கிஞ்சித் தேனும் காட்டுதல் இயலுமா? அறிஞர்கள் சிந்திப்பார்களாக.

## சாதிகள்!!

தூய்மையான தெளிவுரைப்புகட்டும் வள்ளுவர் வாக்கு மாசுபடிந்து விட்டதே யென்பதையறியும் பொழுது எந்தத்

தமிழனும் மனங்கொதியாதிரான். **சாதி** என்கிற சண்டாள எண்ணத்தை ஆசிரியர் வள்ளுவனார் அறவே அழித்தொழிக்க வேண்டுமென்றே குறள்செய்து வைக்கலானார். **சாதி** என்கிற சொல்லினையே திருக்குறளில் காணமுடியாது. ஆனால் **பரிமேலழகரோ** வேண்டுமென்றே சாதியென்கிற வார்த்தைகளைப் புகுத்திக் குறட்பாக்களை மாசுபடியச் செய்துவிட்டார். அந்தோ! "**கல்லாமை**" என்று குறிப்பிடப்பட்டுள்ள திருக்குறள்—அதிகாரத்தில் ஒரு குறட்பா:—

**மேற்பிறந்தார் ஆயினும் கல்லாதார் கீழ்ப்பிறந்தும்**
**கற்றார் அனைத்திலர் பாடு—**

[திறமையும், செல்வாக்கும், உயர் நிலையும் இன்னும் இன்னபிற பண்புகள் பெற்ற வாழ்க்கை பெற்றிருக்கும் குடும்பத்தில் ஒருவன் **பிறந்துவிட்டான்** என்றாலும் கல்வி இல்லாதவனே யானால், அவன் மிகமிக ஏழ்மையான சாதாரணமான கீழ்த்தன்மைப் பெற்றிருக்கும் ஒரு குடும்பத்தில் பிறந்து கல்வி கற்றிருப்பவன் பெருமைக்குச் சமமானவனாகமாட்டான்] இதுவே குறட்பாவுக்கு அமைந்துள்ள எளிய கருத்து.

இக்கருத்தமைந்த குறளுக்கு உரையெழுதப் புகுந்த "பரிமேலழகர்" **மேல்சாதி, கீழ்சாதி** என்ற சாதிக்கருத்துக்களை இழுத்து வைத்துப் பேதாபேதங்களுக்குக் குறளிலும் இடமுண்டு என்று காட்ட முனைகின்றார். அவர் எழுதுகிறார்:—

> "கல்லாதார் உயர்ந்த **சாதிக்கண்** பிறந்தாராயினும் தாழ்ந்த **சாதிக்கண்** பிறந்து வைத்துங் கற்றாரது பெருமை அளவிற்றாய பெருமையிலர்"—

---

மேற்பிறந்தா ராயினுங் கல்லாதார் கீழ்ப்பிறந்துங்
கற்றா ரனைத்திலர் பாடு

இதனை ஒரு குறிப்பாக அறிஞர்கள் கொள்ளுதல் வேண்டும். உரையெழுதப் புகுந்த பரிமேலழகர், பொதுப்பட எழுதப்பட்ட வள்ளுவனாரின் புனித நூலுக்குள் எங்ஙனம் சாதி, மதம், வருணம் என்பவைகளை யெல்லாம் கலந்து வைத்துக் காட்டிப் படிப்பவர்கள்—**இவ்வுயர்ந்த குறள் நூலினைக்கற்றும்**—சாதிமத உணர்ச்சி பேதத்துடன் இருக்க வேண்டும் என்றே விரும்புகின்றார் (பரிமேலழகர்) என்னும் உண்மைப் புலப்பட்டுவிடுகின்றது.

## மாசு படிகிறது.

**"ஆண்களோடு பெண்களும் சரிநிகர் சமானமாக**
**வாழ்வோம் இந்த நாட்டிலே"—**

என்று கவிஞர் சுப்பிரமணிய பாரதியார் பாடிச்சென்றார். பெண்களுக்கு ஏற்ற பெருமையினைக் குறித்தார். அங்ஙனம் பாரதியாருக்கு உணர்ச்சியூட்டித் தெளிவித்தது திருக்குறள் என்பதைக்கண்டு "**யாமறிந்த புலவரிலே வள்ளுவர்போல் கண்டதில்லை**" என்றுகூறி மகிழ்ச்சி யடைந்தார். அறிவுத் துறையில் வைத்துப் பேசும்பொழுது ஆண்களுக்கும் பெண்களுக்கும் யாதொரு வேறுபாடும் **வள்ளுவர் எண்ணத்தில்** இல்லை. பாரதியார் கூறுவது தவறு என்று காட்டுவதுபோல், பரிமேலழகர் செய்துகாட்டும் உரை குறிப்பிடுகிறது. '**அறிவின் சிறப்பு**' பெண்களுக்கு உரியது இல்லை என்று பெண்களைப் பற்றிப்பேசுகிறார். **பெண்ணினத்தைத் தாழ்த்திக்கூற இதை விட மோசமான முறை வேறு ஒன்றுமே இருக்க முடியாது.** "மக்கட்பேறு" என்பதாக ஒரு அதிகாரம் உள்ளது. மக்களின் இன்பத்தையும் நன்மையினையும் மிகமிக அழகாக எடுத்தமைத்துக் கூறுகின்றார். அவ்வதிகாரத்தில் '**மக்கள்**' என்னும் சொல்லினுக்குப் பொதுப் பொருள்பட விளக்கப்பட்டுள்ள ஒரு குறட்பா:—

**பெறுமவற்றுள் யாமறிவது இல்லை அறிவறிந்த மக்கட்பேறு அல்ல பிற.**

[ஒருவன் பெறும் செல்வங்களுள் (மிகச்சிறந்தது) அறிய வேண்டுவன அறிதற்குரிய மக்களைப் பெறுதலேயாகும். அது வன்றி சிறந்ததுவேறு எதுவுமே இல்லை.]

இக்குறட்பாவில் ஆண்என்றோ பெண்என்றோ குறிப்பிட வில்லை. நிற்க ஆண்களுக்குத்தான் அறிவின் மேம்பாடு உண்டு; பெண்களுக்கு இல்லை என்றும் வள்ளுவர் எண்ணிஞரில்லை. அங்ஙனமிருக்க **வடவர் கூற்றுக்கு** இங்கு இடமேது? வட மொழி நூல்களில் 'பெண்ணினத்தை' மிகக்கேவலமாகக் கூறப் பட்டுள்ளதென்பதை யாரும் மறுக்க முடியாது. **அக்கருத்தினை மனதில் வைத்துக்கொண்டு திருக்குறளுக்கு உரையெழுதவந்த பரிமேலழகர்,** "அறிவறிந்த மக்கள்" (அறிய வேண்டியனவற்றை அறிதற்கு உரிய மக்கள்) என்று வள்ளுவர் கூறியுள்ளபடியால் பெண்மக்களை நீக்கி ஆண்மக்களையே குறித்தார். **ஏனெனில் பெண்மக்களுக்கு அறிய வேண்டியனவற்றைஅறிந்து அறியும் அறிவு இல்லாததினுலேயே ஆகும்** என்பது சுட்டிக் காட்டப்பட்டது. இவ்வுரை ஏற்றதற்குரியதா? அறிஞர்கள் சிந்திப்பார்களாக. பரிமேலழகர் கூறுகிறுர்:—

> "அறிவறிந்த வென்றதனுன் மக்களென்னும் பெயர் **பெண்ணொழிந்து** நின்றது." [பெண்மககளை ஒழித்து ஆண்மக்களைக் காட்டிற்று.]

இதுபோன்ற இடங்களில் நடுவு நிலைமையுடன் நின்று உரைகாணுதல் வேண்டும். நமது விருப்பப்படி, நான் விரும்பும் கருத்துக்களை ஆசிரியர் வள்ளுவனுர் குறளுக்கு உரையாகக்

---

பெறுமவற்றுள் யாமறிவ தில்லை யறிவறிந்த
மக்கட்பே றல்ல பிற.

காட்டி மகிழ்தல் நேர்மையென்று அறிஞர்கள் கூறமாட்டார்கள்.

## புராணக் கதைகள்!

உலகிற்குத் தனிநூலாக எழுதப்பட்டுள்ள பொதுமறை யொன்றிற்குத் தனிப்பட்ட ஒரு மதத்தின் கதைகளைக் காட்டுதல் முறைமையாகாது. உதாரணமாக, சைவம், வைணவம் என் பனபோன்ற மதங்களின் பெயர்களை பொது மறையான நூலில் **பரிமேலழகர்** குறித்துக் காண்பிக்கின்றார்.

முதலாவது அதிகாரத்தில் சைவ ஆகமங்களின் சம்பந் தத்தைக் குறிக்குமாறு விளக்கம் காட்டுகின்றார். மூன்று கடவுள் களைக் குறிப்பதும் அம்மூவருக்கும் முதற்கடவுள் என்று கூறு வதும் **'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்'** என்று வழங் கப்படுகிற தமிழன் பண்பாட்டிற்கு ஏற்ற முடையதாகாது.

"நீத்தார் பெருமை" "பிறனில் விழையாமை" என்ற பெயர்களில் அமைக்கப்பட்டுள்ள அதிகாரங்களில் **இந்திரன்** என்னும் புராணக்கதைகளின் கூற்று படும்படி எழுதிச்செல்லு கின்றார். 'அன்புடைமை' என்ற அதிகாரத்தில் "சிபி" என் பார்கதை உரைப்பகுதியில் காட்டப்படுகிறது. இந்திரனும் கெட்டுவிடுவான் என்று "பெரியாரைப் பிழையாமை" என்ற பகுதியில் குறிக்கின்றார். மேலும், பரிமேலழகர் கம்பராமா யணத்தில் கண்ட செய்யுளடி ஒன்றினைச் சுட்டிக்காட்டி இரா மனின் பெருமையினைக்கூறும், அதனை மேற்கோளாக "படைச் செருக்கு" என்னும் அதிகாரத்தில் காட்டுகின்றார்: இவ்வாறு "கூறப்படுகிற கதை—புராண—இதிகாச மேற்கோள்களைக் காட்டு தல், **தனிப்பட்ட எம்மதத்தினையும் கொள்கைகளையும் சாராது, உலகமக்கள் அனைவர்க்கும் பொதுப்பட எழுதிய வள்ளுவர் எண்ணங்களுக்கு மாறானவைகளேயாகும். இத்தவறினைக் களைந்தெறிதல் நமது கடனன்றோ?**

## உடனடியாக அறிஞர்கள் செய்தருள வேண்டியவை.

இச்சிறுநூலில் கூறப்பட்ட கருத்துகள் அனைத்தையும் ஒரு குறிப்பாகக் கொண்டு திருக்குறளினைத் தூய்மைப்படுத்த முயலுதல் வேண்டும். பரிமேலழகர் ஆங்காங்கு செய்துள்ள பற்பல குறைபாடுகளை உடனே களைதல் வேண்டும். பொதுமறைக்குப் பங்கம் விளைவிக்கும் **சொற்களை** உடனே விலக்குதல் வேண்டும்.

'குறை கூறுதல்' அல்லது 'குற்றங் கூறுதல்' என்கிற எண்ணத்தினை மனதிற் கொள்ளாது, பரிமேலழகர் செய்துள்ள தவறுகளைக் கண்டித்தல் வேண்டும். திருக்குறளினைப் பரிமேலழகர் உரையுடன் ஊன்றிப்படிப்போர்—பொதுமறைக்கு ஒவ்வாத வடவர்—வடமொழிக் கூற்றுக்களை உரையாசிரியர் எங்ஙனம் வலிந்து எளிதில் புகுத்துகின்றார் என்பதனை எளிதில் அறிதல் இயலும். **மனுதர்மம், வருணபேதம், வடமொழிக் கொள்கை மேற்கோள்கள், இந்துமதக் கருத்துக்கள்**—இன்ன புராண இதிகாச பிற உரைகள் குறட்பாக்களுக்கு விளக்கங் காணும்பொழுது சம்பந்தப்படாதபடி பார்த்துக் கொள்ளுதல் கடமையாகும்.

**சொல்லரிய நூலதனைத் தந்திட்டார் தூய்மைசேர்**
**வல்லார் திருக்குறளின் வள்ளலார்—பொல்லா**
**உரைதான் பரிமே லழகருரை யூரேல்**
**குறைநீக்கிக் கொள்வோம் குணர்.**

---

**திருக்குறளுக்கு உரைகண்ட பரிமேலழகர், "திருக்குறள் தனி முதல் அறநூல்" என்னுங் கருத்தினை மறுப்பது போன்று, வடவர் கருத்துக்களையும் பிறவற்றையும் உரைப்பகுதிகளில் ஆங்**

**காங்கு காட்டிச் செல்லும் குறிப்புகளில் ஒருசில:-**

1. பிதிரராவார் படைப்புக் காலத்து அயனுர் படைக்கப்பட்டதோர் கடவுட் சாதி;
(இல்வாழ்க்கை)

2. முனிவர்கடன் கேள்வியானும், தேவர்கடன் வேள்வியானும், தென்புலத்தார்கடன் புதல்வரைப் பெறுதலானுமல்லது இறுக்கப்படாமையின், அக்கடனிறுத்தற் பொருட்டு நன்மக்களைப் பெறுதல்.
(மக்கட்பேறு)

3. பெரிய வறங்களைச் சிதைத்தலாவது ஆன்முலையறுத்தலும், மகளிர் கருவினைச் சிதைத்தலும் **பார்ப்பார்த்தபுதலும்** முதலிய பாதகங்களைச் செய்தல் (செய்ந்நன்றி யறிதல்)

4. அதனுற் செய்யப்படும் அறங்களாவன பயனேக்காது செய்யப்படும் **கடவுட் பூசையும்** தானமும் முதலாயின. (நிலையாமை)

5. கடவுள், அந்தணர், வறியோரென்றிவர்க்கும் புகழிற்குங் கொடுத்தலை அறப் பொருட்டாகவும்... (இறைமாட்சி)

6. அவியாகிய உணவு தேவர்க்கு வேள்வித்தீயிற் கொடுப்பன. (கேள்வி)

7. அவை கடவுளரையுந் தக்கோரையும் நோக்கிச்செய்யுஞ் சாந்திகளா னீக்கப்படும்—
(பெரியாரைத் துணைக்கோடல்)

8. அவற்றுள், அறவுபதையாவது புரோகிதனை யும் அறவோரையும் விட்டு, அவரால் இவ் வரசன் அறவோனன்மையின் இவனைப்போக்கி (தெரிந்து தெளிதல்)

9. இவ்வடநூற் பொருண்மையை யுட்கொண்டு இவரோதிய தறியாது பிறரெல்லாம் இதனை... (தெரிந்து தெளிதல்)

10. முதலாய செயல்கள் சாதி தருமமாகிய இவற் றின் வழீஇயோர்க்கு உள்ளது நிரயத் துன்ப மேயாகலின்... (பொச்சாவாமை)

11. அதியென்பது வடசொல்லுள் மிகுதிப் பொரு ளதோரிடைச்சொல்; அது திரிந்து நுட்ப மென்பதனோடு தொக்கது— (அமைச்சு)

12, உழையிருந்தா னெனப்பெயர் கொடுத்தார் அமாத்திய ரென்னும் வடமொழிப் பெயர்க் கும் பொருண்மை அதுவாகலின். (அமைச்சு)

13. வடநூலார் இவ்விரு வகையாருடன் ஓலை கொடுத்து நிற்பாரையும் கூட்டித் தூதரைத் தலை, இடை, கடையென்று வகுத்துக் கூறி னாராகலின், அவர் மதமும் தோன்றலைத்தலை என்றார்.— (தூது)

14. சங்கேதம் சாதி பற்றியும் கடவுள் பற்றியும் பலர்க்குளதாம் ஒருமை.— (நாடு)

15. நகுடனென்பான் இந்திரன் பதம் பெற்றுச்

செல்கின்ற காலத்துப் பெற்ற களிப்பு மிகுதியான் அகத்தியன் வெகுள்வதோர் பிழை செய்த தனாற் சாபமெய்தி இடையே...

(பெரியாரைப் பிழையாமை)

16. அவையெல்லாம் வெகுண்டவரது ஆற்றலால் **திரிபுரம்** அழிந்து விடுமாகலின் உய்யாரென்றார்.

(பெரியாரைப் பிழையாமை)

17. உயர்ந்த குடிப்பிறப்பு நால்வகை **வருணத்தார்க்கும்** இன்றியமையாதாகலின் அச்சிறப்புப்பற்றி இது முன்வைக்கப்பட்டது—

(குடிமை)

18 வினைவயத்தால் பஞ்சபூத பரிணாமமாகிய யாக்கையைப் பொருந்தி நின்று அதன் பயனனுபவித்தல் எல்லா **வருணத்தார்க்கு** மொத்தவிற்பிறப்பொக்கு மென்றும்— (பெருமை)

19. **வடநூலார்** அங்கமென்றமையின் உறுப்பென்றார் (பண்புடைமை)

20. வடநூலார் இடக்கர்ப் பொருளவாகச் சொல்லிய புணர்ச்சித் தொழில்களும் இண்டு அடங்கிக் கூறப்பட்டன.—

(புணர்ச்சி மகிழ்தல்)

21. எம்மை யென்பது நும்மோடியாது மியைபில்லாத வெம்மை யென்பது படநின்ற இசையெச்சம். இதனை **வடநூலார்** காகுவென்ப.—

(புலவி நுணுக்கம்)

22. இண்டுப்பிரிவினை வட நூல் மதம்பற்றிச் செலவு ஆற்றாமை விதுப்புப் புலவியெனா நால்வகைத் தாக்கிக் கூறினார். அவற்றுட் செலவு பிரிவாற்றாமை யுள்ளும், ஆற்றாமை படர்மெலிந் திரங்கல்... லுவகை)

# இந்தநூலில்

பரிமேலழகர் திருவள்ளுவர் அருளிய குறளற உண்மைகளுக்கு முற்றிலும் மாறான வடவர் கொள்கைகளைப் புகுத்தி தமிழனுடைய **உலகப் பொதுமறையான திருக்குறளினை** எங்ஙனம் மாசுபடியச் செய்துவிட்டார் என்பது மட்டும் எடுத்துக் காட்டப்பட்டது. தனித்தனியாகக் குறட்பாக்களின் உரைகளில் பரிமேலழகர் எங்ஙனம்—முன்னைய உரையாசிரியர்களை மறுத்தும் தமது விருப்பத்திற் கேற்றபடி உரைசெய்தும் காண்பிக்கின்றார்—என்பதைப் பற்றிப் பிறிதோர் நூலில் எழுதுகின்றோம்.

இங்ஙனம்,

**திருக்குறள் முனிசாமி.**



திருக்குறள் அச்சகம் லிமிடெட்., கடலூர், (புதுநகர்.)

## அவள் சிரித்த சிரிப்பு
## 0—2—0

வள்ளுவர் உள்ளத்தில் புதைந்து கிடக்கும் இன்பநய மணிகளை அழகிய முறையில் எளிமையாக எடுத்துக்காட்டுகிறது. காவடித்தண்டு, கனியும் கருக்காயும், அடையாளம் என்பனபோன்ற புதிய எண்ணங்களைக்கவர்ச்சியுடன் விளக்குகிறது. தமிழன் கையில் இன்றே இடம்பெற வேண்டிய ஒரு நல்ல நூல்.

## இன்பத் தோட்டம்
## 0—2—0

உள்ளத்தைக் குளிர்விக்கும் ஒரு ஒப்பற்ற நூல். 'அனிச்சப்பூ' முதலாக 'தூக்கம்வருமா?' இருக அழகிய பகுதிகளைக்கொண்டது. ஏங்கித்தவிக்கும் இன்பக்காதலியின் உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் அன்பும் அறிதற்கரிய கற்பும் இந்நூலில் பின்னிக்கொண்டு மிளிர்கின்றன, வள்ளுவனார் எண்ணிய எண்ணங்களைக் கண்ணாடிபோல் காட்டும் கருத்தமைந்த நூல்.

## ஏன் இந்த வாழ்வு
## 0—2—0

இடித்துரைக்கின்றார் வள்ளுவர். ஏன் இந்தவாழ்வு என்ற ஒரு கேள்வியினை எழுப்பிக் கொண்டு, அறம்வளர்த்த தமிழகத்தில் வாழ்ந்த வள்ளுவனார் அறிவுக்களஞ்சியத்தைப் பெய்துவிடுகின்றார் என்பதற்கோர் எடுத்துக்காட்டு. உணர்ச்சியூட்டி உள்ளத்தைத் தட்டியெழுப்பி நிமிர்ந்து நில்; நேர்மையைக்கடைப்பிடி; போலியை இடித்துத்தள்ளு என்பதாக நேரில் பேசுகிறார் இந்தநூலில்.

## மானத்தை விற்காதே
## 0—2—0

"அடடா! இதுவும் ஒரு வாழ்க்கையா" என்று இந்த மானிட உலகத்தை முன்னே நிறுத்திக்கொண்டு ஆசிரியர் வள்ளுவனார் அறவுரைப் புகட்டுகின்றார். யாருக்கு யமன், விற்கிறான் என்பதைப்போன்ற நகைச்சுவை பகுதிகளின் அடிப்படையில் வள்ளுவனார் குறட்பாக்கள் உயர்ந்த வாழ்க்கையினை மெய்ப்பிக்கின்றன. இன்றே—இப்பொழுதே வாங்கிப்படிக்க வேண்டிய நூல்.

## இன்பம் தரும் இன்பம் 0—1—6

இன்ப சாகரத்தில் ஒரு ஆராய்ச்சி. காதலர் வாழ்க்கையில் ஒரு புரட்சி. ஆற்றொழுக்கு நடையில் அதியுன்னத களவு—கற்பு—என்ற பகுதிகளில் காணும் நுண்ணிய—வெளியிட்டுக் கூறமுடியாத, உள்ளத்திலேயே எண்ணியெண்ணிப் பூரிக்கும் நயங்களை ஆசிரியர் நயமுடன் விளக்கிச்சொல்லுகின்றார். வள்ளுவனார் உள்ளத்தைத் தொட்டுக்காட்டி மகிழ்விக்கும் அரிய நூல்.

கிடைக்குமிடம்:-

**திருக்குறள் அச்சகம் லிமிடெட்.; கடலூர், (புதுநகர்.)**